Regd. No.2975 ஶ்ரீ:



# ஸ்ரீ ராமாநுஜன் - 341

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN



Editor:

*Mahamahopadhyaya*

P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா 10 ரூ. ஜீவியச் சந்தா ரூ. 25





ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.






[illegible]ர்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

1976 நவம்பர், நளஞு ஐப்பசிமீ

ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்

# ஸ்ரீ காஞ்சீ நம்பிள்ளை மஹோத்ஸவ ப்ரகடனம் (நள ௵ 1976)

¤¤¤¤¤¤¤¤¤¤

ஸ்ரீ காஞ்சி தேவப்பெருமாள் ஸந்நிதியின் திருமுன்பே திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கும் நம்பிள்ளைக்கு நாளது கார்த்திகை மீ 11வ (26—11—76) வெள்ளிக்கிழமை உத்தராட நக்ஷத்திரத்தில் திருவவதார மஹோத்ஸவம் தொடக்கமாகி கார்த்திகை மீ 20வ (5—12—76) ஞாயிற்றுக்கிழமை திருக்கார்த்திகைத் திருநக்ஷத்திரத்தில் சாற்றுமுறையாகும். பத்து நாட்களிலும் அலங்கார திருமஞ்சனமும் இரண்டு வேளைகளிலும் திவ்யப்ரபந்த ஸேவை கோஷ்டிகளும் ததீயாராதனமும் விசேஷ வைபவமாக நடைபெறும். வித்வான்களின் உபந்யாஸங்களும் நடைபெறும். ஆஸ்திகர்கள் அனைவரும் வந்திருந்து அநுபவித்து ஆனந்திக்கவேணும். இம்மஹோத்ஸவ ஸேவார்த்தமாக வெளியூர்களிலிருந்து வரும் பக்த பாகவதோத்தமர்களுக்கு ஸ்தலவசதி முதலிய ஸௌகரியங்கள் விசேஷமாகச் செய்து கொடுக்கப்படும். ஸ்ரீ வைஷ்ணவ பக்த சிகாமணிகள் குழாங்கூடியிருந்து அநுபவிக்கக்கூடிய மஹோத்ஸவமிது.

சாத்துமுறையன்று ஸ்ரீ யதோக்தகாரி எம்பெருமான் புறப்பாடு கண்டருளி நம்பிள்ளை ஸந்நிதியிலெழுந்தருளியிருந்து நடைபெறும். இரண்டாயிரம் ரூபாய் செலவில் விசேஷ வைபவங்களுடன் நடைபெற்றுவருகின்ற இந்த மஹோத்ஸவத்திற்கு பக்தர்கள் உகந்து யதாசக்தி பொருளுதவி புரிந்து ஆசார்ய ஸார்வபௌமருடைய இம் மஹோத்ஸவத்தை மிகவும் சிறப்பிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

இங்ஙனம்,

சின்னகாஞ்சீபுரம், 10—11—76

P. B. ANNANGARACHARYA
Founder, Sri Nampillai Sannidhi.

# ஸ்ரீ ராமாநுஜன்—541



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சி ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்

| ஸம்புடம் 29 | நளஹூ ஐப்பசி மாதம் 10—11—76 | ஸஞ்சிகை 5 |
| --- | --- | --- |


## ஐப்பசித் திருமூல மஹோத்ஸவ வைபவம்

கடல்சூழ்ந்த மண்ணுலகில் ஸகல திவ்யதேசங்களிலும் ஸாதாரண தேவாலயங்களிலும் மணவாளமாமுனிகளின் ஐப்பசித் திருமூல மஹோத்ஸவம் நடைபெற்றாலும் ஸ்ரீ காஞ்சி. தேவப்பெருமாள் ஸன்னிதியில் நடைபெறும் இம்மஹோத்ஸவம் தனிச் சிறப்புவாய்ந்ததென்பதை உலகமறியும். இது ஸ்வதேசாபிமானத்தினால் எழுதுவதன்று. பெரும்பாலும் (ஆங்காங்குள்ள) அனைவரும் அநுபவித்தறிந்ததேயாம். சில்விடங்களில் திருநக்ஷத்திரத்தன்று மட்டும் விசேஷோத்ஸவம் நடைபெறும். சில விடங்களில் ஐந்துநாளுத்ஸவம் நடைபெறும். சில பல விடங்களில் பத்துநாளுத்ஸவம் நடந்தாலும் பகலோ இரவோ ஒருவேளை மட்டும் நடக்கும். இவ்விடத்து நிகழ்ச்சிமுறைகள் நிகரற்றவை. இவ்வாண்டு நிகழ்ச்சியை ஈண்டு விஜ்ஞாபிக்கிறேன்.



ஐப்பசித்திங்கள் 2உ (18–10–76) திங்கட்கிழமையன்று இம்மஹோத்ஸவத் தொடக்கம். நல்ல முஹூர்த்தம் பார்த்து வெளியில் எழுந்தருளச்செய்வதென்பது முதற் காரியம். அன்று சிற்றஞ்சிறு காலையில் 5 மணிக்குமேல் 6 மணிக்குள்ளான காலம் நல்லவேளையாயிருந்தபடியால், அப்போது புறப்பாடு கண்டருளி வெளிப்

பந்தலில் பத்தியுலாவி திவ்யதேச மங்களாசாஸனம் செய்தருளி 6 மணிக்கு உள்ளே யெழுந்தருளியாயிற்று. தினப்படி பகல் 11 மணிக்குத் திருமஞ்சனம் தொடக்கமாகி, பிற்பகல் நான்கு மணிவரையில் அருளிச்செயல்ஸேவை நடைபெறுவது. தீர்த்தப்ரஸாதவிநியோக கோஷ்டி 4–30 மணிக்குள் முடிவு பெறுவது. பிறகு இரவு 7 மணிக்குப் புறப்பாடுகண்டருளி வெளிப்பந்தலில் பத்தியுலாத்தலும் ஊஞ்சலும் கண்டருளி உள்மஹாமண்டபத்தில் எழுந்தருளியானபின் 8 மணி முதல் 10 மணிவரையில் திருவாய்மொழிஸேவை நடைபெற்று, மாமுனிகளின் ஸ்ரீஸூக்தி விசேஷ உபந்யாஸத்துடன் தீர்த்த ப்ரஸாத விநியோக கோஷ்டி முடிவு பெறுவது. ஒன்பதாமுத்ஸவம் வரையில் இதுவே நிகழ்ச்சியாகும். முதலிரண்டு திருநாட்களில் (பகலில்) பெரியாழ்வார் திருமொழி சாத்துமுறையாகும் மூன்றாந்திருநாளில் திருப்பாவை நாச்சியார் திருமொழிகள். நான்காந் திருநாளில் பெருமாள் திருமொழியும் திருச்சந்த விருத்தமும். ஐந்தாந்திருநாளில் திருமாலை தொடங்கி முதலாயிரம் சாத்துமுறையாகும். ஆறாந்திருநாள் முதல் பெரியதிருமொழி ஸேவை நடைபெற்றுவரும். தினப்படி இரவில் திருவாய்மொழி ஸேவையே நடைபெறும். இவ்விதமாகவே ஒன்பதுநாளும் நடந்தேறியது.

## ஐப்பசி 11உ (27—10—76) திருமூலத்தன்று சாத்துமுறை மஹோத்ஸவ நிகழ்ச்சி வருமாறு.

காலை 7 மணியிலிருந்து 10 மணிவரையில் திருவெஃகா மணவாளமாமுனிகள் ஸ்ரீ யதோக்தகாரி யெம்பெருமானோடுகூட தேவப்பெருமாள் ஸந்நிதி வீதி மாட வீதிகளில் மஹோத்ஸவம் கண்டருளியாயிற்று அதன் பிறகு, தேவப்பெருமாள் இரவு உத்ஸவத்திற்காக திருமலையிலிருந்து கீழ கண்ணாடியறைக்கு எழுந்தருளியாயிற்று. அதன் பிறகு மணவாளமாமுனிகள் இரண்டு மணிகாலம் திருமஞ்சனம் கண்டருளி தினப்படிமுறையில் அருளிச்செயல் ஸேவையாகி மாலை ஐந்து மணிக்குத் திருப்பாவை சாத்துமுறை தொடக்கமாயிற்று. இரவு 7 மணிக்குத் திருப்பாவை சாத்துமுறை கோஷ்டி தலைக்கட்டிற்று.

## இனி திருவாய்மொழி சாத்துமுறை வைபவம்

(அன்றிரவு தேவப்பெருமாள் ஸந்நிதி வீதி புறப்பாடுகண்டருளி மாமுனிகள் ஸந்நிதிக்கு எழுந்தருள்வது வழக்கம். பேலண்டை கோபுர ஜீர்ணோத்தாரணம் செய்வதற்கு 13—10—76 நன்னாளில் முஹூர்த்தமிட்டு பாலாலயம் செய்திருப்பதான ப்ரஸித்தி உலகமறிந்ததே. அதனால் அந்நாள் முதலாக பஞ்சபர்வோத்ஸவாதி ஸகல மஹோத்ஸவங்களும் ஸந்நிதிக்குள்ளேயே நடைபெற்று வருவதால் $வழக்கமான ஸந்நிதிவீதிப் புறப்பாடு இல்லையாயிற்று) அன்றிரவு தேவப்

$ கோபுர ஜீர்ணோத்தாரணம் முஹூர்த்த ஸம்விதானத்தளவிலே நிற்கிறது. ஏறக்குறைய ஒருமாதமாகியும் இதுவரை திருப்பணி தொடக்கமாகவில்லை. அதைப்பற்றின முயற்சியும் காணவில்லை. உத்தராயணம் பிறந்ததும் வரிசையாகப் பல மஹோத்ஸவங்கள் ப்ராப்தமாகின்றன. வைகாசி ப்ரஹ்மோத்ஸவமுட்பட எல்லாவுத்ஸவங்களும் ஸந்நிதியினுள்ளேயே அநுபவிக்க நேரும்போலும் என்று பலர் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்.

பெருமாள் எட்டு மணிக்குப் புறப்பாடு கண்டருளி ஆழ்வார் திருவீதிவலமாக விசேஷவாத்யச்சேரியுடன் பத்து மணிக்கு மாமுனிகள் ஸன்னிதி வாசற்பந்தலில் சேர்ந்து, எதிர்கொண்டழைக்க எழுந்தருளின மாமுனிகளுக்கு மரியாதை ஸாதித்து, மாமுனிகள் பின்செல்ல உள்ளே யெழுந்தருளி ஆஸ்தானமலங்கரித்தாயிற்று. பிறகு க்ஷேமத்தளிகை அமுதுசெய்து விநியோகமாகி, திருவாய்மொழி ஸேவையும் ஸ்வப்ரபந்தஸேவையும் நடந்து 3-30க்கு சாத்துமுறை தொடக்கமாயிற்று. தீர்த்தப்ரஸாத விநியோக கோஷ்டி முடிவதும், கதிரவன் குணதிசைச் சிகரம் வந்தணைவதும் ஸமகாலமாயிருந்தது. பிறகு மாமுனிகளுடன் புறப்பட்டருளி காலை 7 மணிக்கு ஆஸ்தானம் சேர்ந்து மாமுனிகளுக்கு பஹுமானங்கள் ப்ரஸாதித்து விடைகொடுத்தருள, மாமுனிகளும் விடைபெற்று ஸன்னிதிக்கெழுந்தருள, திருவாசற்பந்தலில் கந்தப்பொடிவஸந்தமாகி உள்ளே எழுந்தருளியாயிற்று.

## இனி இயற்பா சாத்துமுறை வைபவம்

உத்ஸவம் பத்துநாட்களில் மூவாயிரமே ஸேவித்துச் சாத்துமுறையாகிறது. இயற்பா ஆயிரம் ஸேவிப்பது பதினோராநாளில். 28—10—76 வியாழக்கிழமை பகல் 2 மணி முதல் 6 மணிவரையில் இராமாநுச நூற்றந்தாதியுட்பட இயற்பா ஆயிரமும் ஸேவித்து நிறுத்தி, தேவப்பெருமாளுடைய நித்ய நைமித்திகக்ரமங்கள் முடிந்த பிறகு இரவு எட்டுமணியளவில் இராமானுச நூற்றந்தாதி சாத்துமுறையாகி, தீர்த்த ப்ரஸாத விநியோக கோஷ்டி பத்து மணியளவில் தலைக்கட்டிற்று.

ஸ்ரீமான் உ. வே. (ஆடிடர்) K. V. நரஸிம்ஹன் ஸ்வாமி யென்கிற தார்மிகோத்தமர் இரண்டாயிரம் ரூபா செலவில் இந்த சாத்துமுறை யுத்ஸவத்தைத் தம்முடைய உபயமாக நெடுநாளாய் நடத்திவருகிறார். அவருடைய ச்ரத்தாபக்திச் செல்வம் மேன்மேலும் ஓங்கி வளரவேணுமென்று மங்களாசாஸநம் செய்து மகிழ்கிறோம். ... ... ... ...

ஸ்ரீரஸ்து.

# ஷஷ்டியப்தபூர்த்தி விசேஷம்

நாற்பதைம்பது வருடங்களுக்குமுன் சென்னை ஹைகோர்ட் ஜட்ஜ் பதவியை அலங்கரித்து விச்ராந்தராகி, ஸ்ரீபெரும்பூதூர் தேவஸ்தான நிர்வாஹதுரந்தரராய் ஐந்தாறு வருஷகாலமிருந்து கீர்த்திமூர்த்திபெற்ற ஸ்ரீமதுபயவே. V. (வளர்புரம்) பாஷ்யமையங்காருடைய கநிஷ்ட திருக்குமாரரான ஸ்ரீமான் V. C. பத்மநாப ஐயங்காருக்கு நேற்று புரட்டாசி மீ 20௨ புதன்கிழமை கூடிய பூரட்டாதி நக்ஷத்திரத்தில் (6-10-76) திருவல்லிக்கேணியில் ஷஷ்டியப்தபூர்த்தி மஹோத்ஸவம் வெகு சிறப்பாக நடைபெற்றது. மதுரதர்சன மதுரபாஷிணிகளான ஸ்ரீபத்மநாப-கல்யாணி தம்பதிகளுக்கு நம்முடைய மங்களாசாஸன ச்லோகப் பாசுரங்கள்—

ஸ்ரீவத்ஸாந்வய துக்தவாரிதி விது: ஸ்ரீபத்மநாபஸ் ஸுதீ:
பூர்வப்ரோஷ்டபதர்க்ஷலப்தஜநந: கந்யாக்க்யமாஸே நளே,
ஸ்ரீரங்கேச்வர—வேங்கடேச—வரத—ஸ்ரீயாதவாத்ரீச்வர
ஸ்ரீராமாநுஜ—ரம்யயோகிக்ருபயா பூர்ணாப்ததாப்தீம் ஜயேத்.

ஸௌபாக்யவத்யா கல்யாண்யா ஸாது ஸங்கீததக்ஷயா,
ஸ்ரீபார்த்தஸாரதே: பாதச்சாயாயாம் ஜயதாத் சிரம்.

**வெண்பா** பற்பநாப வாரியனார் பாரில் நெடுங்காலம்
நற்பதவி யேற்று நலமாகக்—கற்பகமாம்
சேவியுடன் தேசுறவே தேவ னருளாலே
வீவிலின்ப மெய்திடுக வே. —பத்ராதிபர்

---

ஸ்ரீ வில்லிபுத்தூரில் உபயவேதாந்த வித்வந்மணியாயும் ஸ்தலாசார்ய புருஷராயு மெழுந்தருளியிருக்கும் ஸ்ரீமதுபயவே. வேதப்பிரான் பட்டர் கோவிந்த ராஜய்யங்கார் ஸ்வாமிக்கும் நேற்று புரட்டாசி மாதத்தில் சுப நக்ஷத்திரத்தில் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம் ஐந்து நாள் உபயவேதபாராயண—ஸ்ரீ பாஷ்ய பகவத்விஷய ரஹஸ்யாதி பாராயணங்களுடனும் வித்வான்களின் உபந்யாஸங்களுடனும் விசேஷ வைபவமாக நடைபெற்றது.

*நல்ல பதத்தால் மனைவாழ்வர் கொண்ட பெண்டிர் மக்களே*.

## நடைபெறவிருக்கும் இரண்டு ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவங்கள்

1. தலைநகரில் பலவாண்டுகள் உயர்பதவியில் வாழ்ந்து ஓய்வுபெற்று ஸ்வஸ்தானமாகிய ஸ்ரீ காஞ்சியிலேயே வஸித்துவருகின்ற ஸ்ரீ உ. வே. பிரதிவாதி பயங்கரம் நரஸிம்ஹாசாரியர்க்கு நாளது கார்த்திகைமீ 4உ சித்ரா நக்ஷத்திரத்தில் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம் நடைபெறவிருக்கிறது. முன் மூன்று நாட்களில் பாராயணங்கள் நடைபெறும்.

2. பாண்டிச்சேரியில் வாழும் அட்வொகேட் ஸ்ரீமதுபயவே. R. ஜகந்நாதய்யங்காருக்கு நாளது கார்த்திகைமீ 3உ ஹஸ்த நக்ஷத்திரத்தில் ஷஷ்ட்யப்தபூர்த்தி மஹோத்ஸவம் முன்னாட்களில் விசேஷ பாராயணங்களுடன் நடைபெறும்.

*தழைநல்லவின்பம் தலைப்பெய்து எங்குந்தழைக்கவே*
நீங்காத செல்வம் நிறைந்து பொலிக பொலிக பொலிக.

---

## இரு மஹான்களின் மறைவு

(1) இவ்விடம் மணவாளமாமுனிகள் ஸந்நிதி ஆதீனக்காரரான ஸ்ரீ உ.வே. வானமாமலை திருவேங்கடாசாரியர் ஸ்வாமி தீபாவளியன்றிரவு திருநாட்டுக்கு எழுந்தருளினர். இவர் நாலைந்து மாதங்களுக்கு முன்பு சதாபிஷேகம் கண்டருளினவர். எண்பது பிராயம் கடந்தவர். இவர்க்குத் திருக்குமாரர்கள் மூவர். சரம கைங்கர்யம் செவ்வனே நடந்து முடிந்தது.

(2) ஸ்ரீபெரும்பூதூரில் எழுந்தருளியிருந்த ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி பேரருளாள ராமாநுஜ ஜீயர் என்று திருநாமம்பூண்ட எதிராஜ ஜீயர் ஸ்வாமி 21—10—76 தேதியில் தம்முடைய மடத்தில் அகஸ்மாத்தாகத் திருநாடலங்கரித்தார். இவர் பூர்வாச்ரமத்தில் C. P. ராஜகோபாலாசாரியர் என்று திருநாமம் பூண்டிருந்தபடியால் ஸி. பி. ஜீயர் என்று வழங்கப்பட்டுவந்தார். வ்யவஹாரங்களில் கைதேர்ந்தவராயிருந்தார். லௌகிகத்திறமை மிக்கவர். பத்து வருஷங்களுக்குமேல் (ஸ்ரீபெரும்பூதூரில்) ஸ்வாமி ஸந்நிதியில் ரிலிஜியஸ் தர்மகர்த்ரு பதவியில் நியமிக்கப்பட்டுத் தொண்டுபூண்டமுதமுண்டுவந்தார். இவருடைய பிரிவு வருந்தத்தக்கது. ... ... ... ...

# உபயவேதாந்த வினு விடைகள் (5)

## (முன்னிதழ்த் தொடர்ச்சி)

**கண்ணன்**—நவீன ஜீர்ணோத்தாரணம் பெற்று மிகமிக ரமணீயமாய் விளங்குகின்ற (கீழண்டை கோபுரவீதியிலுள்ள) உடையவர் திருமாளிகையில் ஸ்ரீ உ. வே. அக்காரக்கனிஸ்வாமி வேதார்த்த ஸங்க்ரஹமென்கிற ஸ்வாமியின் திவ்யக்ரந்தத்தை மூன்றுமாதகாலம் ஆதியோடந்தமாக ப்ரவசநம் செய்தருளினபடியாலே அந்த காலக்ஷேப கோஷ்டியில் அந்வயித்திருந்து அபூர்வமான பல விஷயங்கள் கேட்கப்பெற்றேன். உண்மையில் என் மனத்தில் தோன்றின தென்னவென்றால், இது வரையில் நாம் தெரிந்து கொண்டிருப்பது ஸ்வல்பம், அதிஸ்வல்பம்; இன்னமும் தெரிந்துகொள்ளவேண்டுவது மலைமலையாக வுள்ளது' என்று தோன்றிற்று.

**ராமன்**—இது நீ பதிதாகச்சொல்லும் விஷயமன்றே; "கற்றது கைம்மண்ணனவு. கல்லாதது மலையளவு" என்று அநாதியான வசனமுமுண்டே. காடகமென்னும் வேதப்பகுதியில் காணும் பரத்வாஜோபாக்கியானம் வேதத்தை மட்டும் பற்றியதன்று. அவரவர்கள் கற்கும் கல்விகளெல்லாவற்றையும் பற்றியதே என்று தெரிந்துகொள். "அநந்தபாரம் பஹு வேதிதவ்யம் அல்பஶ்ச காலோ பஹவஶ்ச விக்நா:, யத் ஸாரபூதம் தது பாததீத ஹம்ஸோ யதா க்ஷீரமிவ அம்புமிஶ்ரம்" என்ற ஶ்லோகம் இன்று நேற்று தோன்றியதன்றே. இந்நிலத்திலுள்ளவர்களை மூன்று வகுப்பாகப் பிரிக்கலாம்:—அஜ்ஞர், அல்பஜ்ஞர். பஹுஜ்ஞர்—என்ற. ஒன்றுமறியாதவர்களு மிருக்கிறார்கள்; ஏதோ சிறிது அறிந்தவர்களு மிருக்கிறார்கள்; பலபலவும் அறிந்தவர்களு மிருக்கிறார்கள்.

**கண்ணன்**—இந்த மூன்று வகுப்புதானோ? ஸர்வஜ்ஞர் என்ற நான்காவது வகுப்பு கிடையாதா? ஃஸர்வஜ்ஞ லோககுருநிர்மிதம் ஆர்யபோக்யம் வந்தே ஸதா வசநபூஷண திவ்யஶாஸ்த்ரம்ஃ என்று அநுஸந்தித்து வருகிறோமே.

**ராமன்**—கண்ணா! நான் சொன்ன மூன்று வகுப்புகள் இக்காலத்திலுள்ளவர்களைப் பற்றியேயன்றி. பூருவாசாரியர்களைப்பற்றியன்று ஸ்ரீமந்நாதமுனிகள் தொடங்கி மணவாளமாமுனிகள் வரையிலுமுள்ள ஸகலாசாரியர்களும், ஃபீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்துஃ என்னும் கணக்கிலே ஸாக்ஷாத் எம்பெருமானுடைய அபராவதார பூதர்களாகையாலே, ஸர்வஜ்ஞர் என்பதற்கும் மேற்பட்ட ஒரு வகைப்புவைத்து அதிலே சேர்க்கவேண்டுமவர்களே அவர்கள் அவதரித்து வடமொழியிலும் தென்மொழியிலும் மணிப்ரவாள ஸரணியிலும் பலபல திவ்யக்ரந்தங்களை யருளிச்செய்து வைக்கையாலன்றோ இன்று நம்போல்வார் வாய்திறந்து ஏதோ உளறிவருவதற்கு இடமுண்டாயிற்று.

**கண்ணன்**— இந்த வார்த்தையைக் கேட்கும்போது உபதேசரத்தினமாலைப் பாசுரமொன்று நினைவுக்கு வருகிறது; (அதாவது) ஃபெரியவாச்சான்பிள்ளை பின்புள்ளவைக்குந் தெரிய, வியாக்கியைகள் செய்வால்—அரிய, அருளிச் செயல் பொருளை ஆரியர்கட்கிப்போது. அருளிச் செயலாய்த்தறிந்து. என்பது; நமது முன்னோர்களின் காலம் ஒரு ஸுபிக்ஷமான காலமென்னவேணும். ஆளவந்தார் காலம், எம்பெருமானார்காலம், நஞ்சீயர்நம்பிள்ளைகாலம். பிள்ளைலோகாசார்யர்

வேதாந்த தேசிகன் காலம்—ஆகிய இக்காலங்களில் அவதரித்த க்ரந்தங்களெல்லா வற்றினுடையவும் ஸாரங்களைக்காணவேணுமானால் மணவாளமாமுனிகளின் க்ரந்தங்களிலேயே காணமுடியுமாகையாலே மாமுனிகள் காலமே ஸ்ரீஸூக்தி ஸங்க்ஷ காலமென்னவேணும். முற்பட்ட ஆசாரியர்களெல்லாருடையவும் ஸ்ரீஸூக்திகளைக் கண்டவர் மாமுனிகளேயன்றோ? இப்போது நான் தெரிந்துகொள்ள விரும்பும் விஷயங்கள் எண்ணிறந்தவை. உபயவேதாந்தங்களிலும் மற்றும் ரஹஸ்யப்ரஸ்தானங்களிலும் தெரிந்துகொள்ள வேண்டிய விஷயங்கள் அளவுகடந்திருப்பதால், இன்ன விஷயத்தைப்பற்றிச் சொல்லவேணுமென்று கேட்கவும் தெரியாத எனக்கு "யம த்வம் மநுஷ்யாய ஹிததமம் மந்யஸே" என்ற கணக்கிலே நீர்தாமே எடுத்துரைக்க வேணும். முந்துறமுன்னம் விசிஷ்டாத்வைதத்தைப்பற்றி ப்ரஸங்கித்தபடியாலே அதைப்பற்றியே ஆர அமர விரித்துரைக்கவேணுமென்று கோருகிறேன். யாரேனும் என்னைநோக்கி "விசிஷ்டாத்வைதத்தைப்பற்றி ஓர் உபந்யாஸம் பண்ணு" என்று நியமித்தால், அவர்கள் த்ருப்தியடையும்படி ஸாரமாக நான் சொல்லுமாறு விஷயங்களைத் தொகுத்துரைக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

**ராமன்**—அப்படியே யாகட்டும். "வணங்குந்துறைகள் பலபலவாக்கி மதிவிகற்பால் பிணங்குஞ் சமயம் பலபலவாக்கி" என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடியே உலகில் பலபல மதங்கள் தோன்றியிருந்தாலும் வைதிக மதங்கள் சிறந்தவை. அவற்றுள்ளும் பரமபவித்திரமான விசிஷ்டாதவைத தரிசனம் மிகச் சிறந்து விளங்குகின்றது. நம்மாழ்வார் திருவாய்மொழி தொடங்கும்போது 'உளன் சுடர் மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே' என்கிற பாசுரத்தினால் 'தாம் போதிக்கும் ப்ரமபுருஷன் வேதங்களிலும் வேதாந்தங்களிலும் விளங்குபவன்' என்றருளிச் செய்கையாலே இக்கலியுகத்தில் அவ்வாழ்வார் தொடக்கமாகப் பரவியுள்ள விசிஷ்டாத்வைத ஸம்பிரதாயம் பரமவைதிகமென்னத்தட்டில்லை. ப்ரமாணம, ப்ரமாதா ப்ரமேயம் என்ற மூன்று வகுப்புகளும் நம் தர்சனத்தில்தான் சீர்மைபெற்று விளங்குவன.

**கண்ணன்**—ப்ரமாணம், ப்ரமாதா, ப்ரமேயம் என்கிற சொற்கள் கொழுத்த ஸம்ஸ்க்ருத பதங்களல்லவா? அவற்றுக்கு நேரான தமிழ்ச் சொற்கள் இல்லையா? ஸாமான்ய ஜனங்கள் வடசொற்களைக் கேட்டவாறே வெறுப்படைவதால் தமிழ்ச் சொற்களை யிட்டே வழங்கினால் நல்லதென்று நினைக்கிறேன்.

**ராமன்**-கண்ணு! நீ சொல்லுவது வாஸ்தவந்தான். த்வைதம், அத்வைதம் விசிஷ்டாத்வைதம், வேதாந்தம் உபநிஷத்து...இத்தகைய சொற்களும் வடசொற்களே. இவற்றுக்கு நேரான தமிழ்ச்சொற்களைக் கொண்டு சொல்லவேணுமென்றால் ஏதோ ஒருவிதமாய்ப் புதிதாக ஸ்ருஷ்டித்துச் சொல்லிவிடலாம். ஆனால் அது பயன் படாது. ச்ருதி, அமரர், சுரர், அசுரர் தானவர் இத்தகைய பதங்கள் வடசொற்களாயிருக்கச்செய்தேயும்இவைதானே தமிழ் நூற்களிலும் வழங்கப்பட்டுவருகின்றன. நன்னூலில்—"எப்பொருளெச்சொலினெவ்வா றுயர்ந்தோர், செப்பினரப்படி செப்புதல் மரபே" என்றொரு சூத்திரமுள்ளது. முன்னோர்கள் எந்த அர்த்தத்தை எந்தச் சொல்லாலே சொல்லிவந்தார்களோ, அந்த அர்த்தத்தை அந்தச் சொல்லாலே சொல்லுவது ஸம்ப்ரதாயம்—என்றவாறு. [ஸம்ப்ரதாயம் என்பது கொழுத்த வட

சொல்; அதைத்தமிழில் சொல்லவேண்டுமானால் மரபு என்னவேணும்; அந்தச்சொல் இலக்கணம் படித்தவர்களுக்கே பொருள்படும். ஸம்ப்ரதாயம் என்கிறசொல் ஸம்ஸ்கிருதமானாலும் அதுதான் எளிதாகப் பொருள்தரும். ஆகவே வழக்கச் சொற்களை வடசொலென்று விடமுடியாது விட்டிட்டு வேறு சொற்களைச் சொன்னால் பொருளுணர்தல் அரிதாம்.

**கண்ணன்**—மனம் தெளிவுபெற்றது. கேட்டுக்கேட்டு வழக்கப்பட்டவர்களுக்கு ஸம்ஸ்க்ருதபதங்களும் எளிதில் பொருள்பட்டுவிடும். முமுக்ஷு, புபுக்ஷு, மந்த்ரம், த்வயம், சரமச்லோகம், ரஹஸ்யம் இத்யாதிகளான பலபல சொற்களை அப்படியப் படியே தானே சொல்லியாகவேண்டியிருக்கிறது. மிக நன்று; மேலே சொல்ல வேணும். இடையில் சிறிது வீண்காலம் கழிந்துவிட்டது.

**ராமன்**—''ஆழ்வார்கள் வாழி, அருளிச்செயல் வாழி, தாழ்வாதுமில் குரவர் தாம்வாழி—ஏழ்பாரு முய்ய அவர்களுரைத்தவைகள் தாம்வாழி, செய்யமறை தன்னுடனே சேர்ந்து'' என்னுமுபதேசரத்தினமாலைப் பாசுரத்தில் ப்ரமாணங்களும் ப்ரமாதாக்களும் ஸாரமாகத் தெரிவிக்கப்பட்டார்கள். ஸம்ஸ்க்ருத த்ராவிட வேதங்களாகிற உபய வேதங்களும் ஸ்ரீபாஷ்ய பகவத்விஷயாதிகளும் நமக்கு ப்ரமாணம். யதார்த்தஜ்ஞான நிதிகளான ஸ்ரீமந்நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார்போல்வாரான மஹாசார்யர்களே ப்ரமாதாக்களில் தலைசிறந்து விளங்குபவர். ஸகல சேதநாசேதந சரீரகனாய் ஸமஸ்த கல்யாண குணாத்மகனான ஸ்ரீமந்நாராயணனே பரதத்துவமென்றும், அவனுடைய திருவடித் தாமரைகளில் பண்ணும் ப்ரபத்தியே பரமஹிதமென்றும், நலமந்தமில்லதோர் நாட்டிலே நித்யாநந்தமயமான நித்ய கைங்கர்யமே பரம புருஷார்த்தமென்றும் இங்ஙனே கூறப்படும் அர்த்த விசேஷங்களே ப்ரமேய ச்ரேஷ்டங்களாக விளங்குகின்றன. ஆக இத்தகைய ப்ரமாண ப்ரமாத்ரு ப்ரமேய வைசிஷ்ட்யமே நம்முடைய தரிசனத்தின் சிறப்புக்கு ஹேதுவாகாநின்றது.

**கண்ணன்**—வைசிஷ்ட்யம் என்னுஞ்சொல்லுக்கு ஏற்றம் என்று பொருளென நினைக்கிறேன். இதரமதஸ்தர்கள் வேதத்தைப் பரமப்ரமாணமாகக் கொண்டாலும் அவர்கள் சொல்லுகிற அர்த்தங்கள் [ப்ரமேயம்] வேதபுருஷன் கருத்துக்கு இணங்காதவையாகையாலே அவர்களது மதத்தில் ப்ரமேயஸௌஷ்டவமில்லை யென்று தேறிற்று. அதுகொண்டே அவர்கள் ப்ரமாதாக்களல்லர் என்பதும் தேறிற்றாம். உண்மையான ஞானத்திற்கு ஸாதநமான [ப்ரமாணமான] வேதங்கள் தங்களால் ஆதரிக்கப்பட்டிருந்தும் உண்மைப் பொருள் காணாமையாலே ப்ரமேயதாரித்ரியமும் ப்ரமாத்ருதாரித்ரியமும் அந்த மதத்திற்கு ஏற்பட்டுவிட்டது—என்று நான் தெரிந்துகொண்டேன். மேலே சொல்லவேணும்.

**ராமன்**—வேதம் கர்மகாண்டமென்றும் ப்ரஹ்மகாண்டமென்றும் இரு வகுப்பாகவுள்ளது பூர்வபாகம் கர்மகாண்டமென்றும், உத்தரபாகம் ப்ரஹ்மகாண்டமென்றும் வழங்கப்படும். உபநிஷத்துக்களையே ப்ரஹ்மகாண்டமென்பது. பகவானுக்கு ஆராதன ரூபங்களான யஜ்ஞம் முதலிய கரும விசேஷங்களை விரி

வாகக் கூறும் வேதபாகம் கர்மகாண்டமென்றும், அக்கருமங்களினல் ஆராதிக்கப் படுகின்ற பகவானுடைய ஸ்வரூப ரூபகுணங்களை விரிவாகக் கூறும் வேதபாகம் ப்ரஹ்மகாண்டமென்றும் சொல்லிற்றாயிற்று. இதுவே உபநிஷத்தென்கிற பெயராலும் வழங்கும். 'உப—நிஷீததி என்கிற வ்யுத்பத்தி கொண்டது உபநிஷத்தென்கிற பதம். பகவானுடைய அருகேயுள்ளதென்கை. "வேதைஶ்ச ஸர்வை ரஹமேவ வேத்ய:" என்கிற கீதையின்படி கர்மகாண்டமுங்கூட பகவானை ப்ரதிபாதிக்க வல்லதேயாயினும் அந்த ப்ரதிபாதனம் வ்யவஹிதமாயிருக்கும். உபநிஷத்து அவ்யவதாநேந ப்ரதிபாதகமாயிருக்கும்.

கர்மகாண்டத்தில் தோன்றும் சங்கைகளைப் பரிஹரிப்பதற்காக ஜைமிநியென்னும் மஹர்ஷியெழுந்து பதினறு அத்யாயங்களோடு கூடிய ஒரு சாஸ்த்ரத்தையியற்றினர். அதற்குப் பூர்வமீமாம்ஸையென்று பெயர். இதில் பன்னிரண்டு அத்யாயங்களே ஜைமினியால் இயற்றப்பட்டவை யென்றும், மேல் நான்கு அத்யாயங்கள் காசக்ருத்ஸ்ந மஹர்ஷியால் இயற்றப்பட்டவையென்றும் ஒரு பக்ஷமுண்டு. இதைப்பற்றி இங்கு விசாரவிரிவு வேண்டா. "வ்ருத்திக்ரந்தே து ஜைமிந்யுபரசிதயா ஷோடஶாத்யாய்யுபாத்தா" இத்யாதியான அதிகரண ஸாராவளி ச்லோகம் காண்க. "ஜைமிநீயம் ஷோடஶலக்ஷணம் என்பது பொதுவான வார்த்தை. போதாயந வ்ருத்திக்ரந்தத்தில் பதினறு அத்யாயங்களும் ஜைமிநிப்ரோக்தமென்று கூறப்பட்டுள்ளது. (லக்ஷணமென்று அத்யாயத்திற்குப் பெயர்.) ப்ரஹ்மகாண்டமென்னும் உபநிஷத் பாகத்தில் தோன்றும் சங்கைகளைப் பரிஹரிப்பதற்காக வ்யாஸ மஹர்ஷியெழுந்து நான்று அத்யாயங்கள் கொண்டவொரு சாஸ்த்ரத்தை இயற்றினர். அதற்கே சாரீரகமீமாம்ஸையென்று பெயர். உத்தரமீமாம்ஸையென்றும் வழங்குபவர். ப்ரஹ்மஸூத்ரமென்பது இதனையே. ஒவ்வோரத்யாயத்திலும் நான்கு பாதங்களுள்ளன. ஆகவே பதினறு பாதங்கள் கொண்டது சாரீரகமீமாம்ஸையென்றதாயிற்று. இதில் ஒவ்வொரு விஷயத்தைப் பற்றி சர்ச்சை செய்து நிர்ணயிக்கும் பகுதிக்கு அதிகரணமென்று பெயரிடப்பட்டுள்ளது. அப்படிப்பட்ட அதிகரணங்கள் இந்த மீமாம்ஸையில் (156) நூற்றைம்பத்தாறு உள்ளன. சில அதிகரணங்களில் ஒரே ஸூத்ரமிருக்கும். பல அதிகரணங்களில் பல ஸூத்ரங்களிருக்கும். மொத்தம் ஸூத்ரங்களின் லக்கம் (545) ஐந்நூற்றுநாற்பத்தைந்து என்றும் கணக்கிடப்பட்டிருக்கின்றது. ஆக, நான்கு அத்யாயங்களையும், பதினறுபாதங்களையும் நூற்றைம்பத்தாறு அதிகரணங்களையும் ஐந்நூற்றுநாற்பத்தைந்து ஸூத்ரங்களையும் கொண்டது ப்ரஹ்மஸூத்ரசாஸ்த்ரமென்றதாயிற்று. தத்வஹித புருஷார்த்தங்களை நாம் தெரிந்து கொள்வதற்கு உபநிஷத்துக்களே தஞ்சமாகும். அவ்வுபநிஷத்துக்களின் பொருள்களை ஸம்சய விபர்யயமற நிஷ்கர்ஷித்து விளக்கக்கூடியது இந்த ப்ரஹ்ம ஸூத்ரசாஸ்த்ரமேயாதலால் வேதாந்திகளுக்கு இதுவே புகலாயிற்று. இந்த சாஸ்த்ரத்தின் பொருளை நிஷ்கர்ஷமாகவும் நிஷ்கல்மஷமாகவும் தெரிந்துகொண்டவர்களே வேதாந்திகளென்றும் ப்ரஹ்மஜ்ஞானிகளென்றும் சொல்லத் தகுதியுடையார். மஹர்ஷிகளியற்றிய ஸூத்ரங்களின் பொருளை நம்போல்வார் சிறிதும் அறியகில்லார்களாதலால், நம்போன்ற அல்பமதிகளிடத்தில் பரமகருணை கொண்ட பூருவர்கள் அந்த

ஸூத்ரங்களின் அர்த்தத்தை விளக்கி பாஷ்யங்கள் இயற்றியுள்ளார்கள். த்வைதம் அத்வைதம் விசிஷ்டாத்வைதம் என உலகப்ரஸித்தமாகவழங்குகின்ற மூன்று மதங்களிலும் பாஷ்யங்கள் அவதரித்துள்ளன. அத்வைதமதத்திற்காக சங்கராசாரிய ஸ்வாமிகள் பாஷ்யமியற்றினர். த்வைத மதத்திற்காக ஆனந்த தீர்த்த ஸ்வாமிகள் (மத்வாசார்) பாஷ்யமியற்றினா நமது விசிஷ்டாதவைத மதத்திற்காக பகவத் ராமாநுஜர் ஸ்ரீ பாஷ்யமருளிச் செய்தார். வட இந்தியாவில் அதிக ப்ரஸித்தி பெற்றுள்ள வல்லப மதம் நிம்பார்க்க மதம் முதலிய மதங்களுக்காகவும் பாஷ்யங்கள் தோன்றியுள்ளன. சைவ மதத்திற்காக நீலகண்ட பாஷ்யம் தோன்றியுள்ளது. இப்படி மற்றும் பல பாஷ்யங்களிருந்தாலும் மதத்ரய பாஷ்யமென்கிற மூன்று பாஷ்யங்களே நமது நாட்டில் குலாவப்படுகின்றன. ஸ்ரீவைஷ்ணவர்களென்றும் விசிஷ்டாத்வைதிகளென்றும் பகவத் ராமாநுஜ தர்சநஸ்தர்களென்றும் வழங்கப்படுகின்ற நமக்கு ஸ்வாமியின் ஸ்ரீபாஷ்யமே ஜீவாதுவாகும்.

**கண்ணன்**—சங்கரபாஷ்யம் மத்வபாஷ்யம் நீலகண்டபாஷ்யம் என்பவை போலல்லாமல் ஸ்ரீபாஷ்யமென்றே தோன்றியுள்ள ப்ரஸித்தி நமது பாஷ்யத்தின் ஒப்பற்ற பெருமையைப் புலப்படுத்துகின்றதல்லவா? மதாந்தரஸ்தர்களும் ஸ்ரீ பாஷ்யமென்றே வழங்கிவருகிறார்களன்றோ? இதற்காக அஸூயையும் படுகிறார்களன்றோ !



**ராமன்**—ஆம், மேலே கேள். உபநிஷத்துக்களின் உண்மைப்பொருளை ஸூத்ரகாரருடைய உள்ளத்திற்கு ஒத்ததாக நிஷ்பக்ஷபாதமாய் நிரூபிக்கப்பட்டது ஸ்ரீபாஷ்யமேயென்று மேனாட்டுப் புலவர்களும் மெச்சியுள்ளார்கள். அது நிற்க; ஸ்வாமி ஸ்ரீபாஷ்யமருளிச் செய்யத் தொடங்கும்போதே "பகவத்போதாயநக்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு:, தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே" என்று [முன்னோர் மொழிந்த முறை தப்பாமே வியாக்கியானிப்பதாக] அருளிச்செய்திருப்பதனால் ஸ்ரீபாஷ்யத்தின் ப்ராமாணிகத்வம் அசைக்க முடியாமல் விளங்குகின்றது. இக்காலத்து அஸூயுக்கள் சிலர் மேலே உதாஹரித்த பங்க்தியின்மேல் வீணான விவாதத்தைக் கிளப்பி பங்கமடைந்து போனார்களென்பது † சதபூஷணீவஜ்ரகுடார — தத்விஜயத்வஜ— சாங்கரசிரோபூஷா—தத்விபூஷணதிக்ரந்தங்களில் விசதமாதலால் அதனை ஈண்டு விவரித்துரைக்கின்றிலேன். ஆர்ஷவ்யாக்க்யாந கவசிதமாயும் அதிப்ராசீநமாயும் பரம பவித்திரமாயுமுள்ளது விசிஷ்டாத்வைதமேயென்றும், அதை நிலை நாட்ட வல்ல பாஷ்யம் ஸ்ரீபாஷ்யமேயென்றும் ப்ராமாணிக வைதிகோத்தமர்களின் கொள்கை.



†பதினைந்து வருஷங்களுக்குமுன்பு (லேட்) அனந்தகிருஷ்ணசாஸ்த்ரிகள், ஸ்வாமி தேசிகனுடைய சததூஷணியின் மீது மறுப்புப்போல் எழுதிவெளியிட்ட சதபூஷணியென்கிற சுவடிக்கும், மைலாப்பூர் ஸம்ஸ்க்ருத காலேஜ் உபாத்யாயராயிருந்த (லேட்) போலஹம். ராமசாஸ்திரிகள் எழுதிவெளியிட்ட 'த்ரமிடாத்ரேயதர்சநம்' என்கிற சுவடிக்கும் கண்டனமாக அக்காலத்தில் PBA எழுதிவெளியிட்ட வடமொழி தென்மொழி நூல்கள் இவை. இப்போதும் இவை கிடைக்கும்.

**கண்ணன்** — த்வைதத்தையும் அத்வைதத்தையும் பற்றின விளக்கங்களைக் கேட்க விரும்புகிறேன். அவ்விரண்டுக்கும் மூலாதாரமாக அவர்கள் கூறும் பிரமாணங்கள் எவை?

**ராமன்** — ச்ருதிவாக்யங்களை யுற்று நோக்கினால் அவற்றில் இருவகையான பாகுபாடு காணப்படும். (1) பேதத்தையே காட்டும் சில வாக்யங்கள். (2) அபேதத்தையே காட்டும் சில வாக்யங்கள். "க்ஷரம் ப்ரதாநம் அம்ருதாக்ஷரம் ஹர: க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக:" என்பதுமுதலான ச்ருதி வாக்யங்கள் சேதந-அசேதந-ஈச்வரரூப தத்வத்ரயத்தின் உண்மையைத் தெரிவிக்கும் முகத்தால் பேதத்தைக் காட்டுகின்றன. "நேஹ நாநாஸ்தி கிஞ்சந" "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" "தத்த்வமஸி" இத்யாதிகளான ச்ருதிவாக்யங்கள் பலவகைப்பட்ட வஸ்துக்களில்லாமையைத் தெரிவிக்கும் முகத்தாலே அபேதத்தைக் காட்டுகின்றன. ஆக, ச்ருதிகளில் சிலவிடத்து பேதப்ரதிபாதகமும் சிலவிடத்து அபேதப்ரதிபாதகமுமிருப்பதாகத் தேறுகையாலே பரஸ்பர விரோதம் ஸ்பஷ்டமாகிறது. விருத்தமான அர்த்தத்தை தெரிவிக்கையாகிற அவத்யம் ச்ருதிகளில் இடம்பெறத் தகாது. விரோதமோ உள்ளதென்று காட்டியாயிற்று. விரோதத்தைப் போக்கி ஸமந்வயம் காட்ட வேண்டிய பொறுப்பு விமர்சகுசலர்களான வைதிகர்களுக்குள்ளது. ப்ரஹ்மமொன்றுதான். ஸத்யமென்றுகொள்ளுகிற அத்வைதிகள் அபேதத்தைக் காட்டும் ச்ருதி வாக்யங்களைமட்டும் முக்கியமாகப் பரிக்ரஹித்து பேதத்தைக் காட்டும் ச்ருதிவாக்யங்களை உபேக்ஷித்துவிட்டார்கள். த்வைதிகளோவென்னில் பேதத்தைக் காட்டும் ச்ருதிவாக்யங்களை மட்டும் முக்கியமாகப் பரிக்ரஹித்து அபேதத்தைக் காட்டும் ச்ருதி வாக்யங்களை உபேக்ஷித்துவிட்டார்கள்.

**கண்ணன்** — ஸத்யவாதிகளான வேதவாக்கியங்கள் பரஸ்பரவிருத்தமான அர்த்தங்களைப் பேசமாட்டாவே. பேசியிருப்பதாகத் தெரியவருகிறதே; இவ்விரண்டையும் [பேதத்தையும் அபேதத்தையும்] பொருந்தவிடுவது எப்படி?

**ராமன்** — "யஸ்ய ப்ருதிவீ சரீரம்" "யஸ்யாத்மா சரீரம்...ய ஆத்மநி திஷ்டந்" இத்யாதி வாக்யங்கள் பகவாந் ப்ருதிவி முதல் ஆத்மா வரையிலுமுள்ள ஸகல வஸ்துக்களிலும் அந்தர்யாமியாயிருக்கிறானென்பதை ப்ரதிபாதிக்கின்றன; இவற்றை த்வைதிகளும் அத்வைதிகளுமான இரு வகுப்பினரும் அறவே விட்டிட்டார்கள். ஸுபாலோபநிஷத்து முதலான அந்தர்யாமி ப்ராஹ்மண வாக்யங்களுக்கு உபய மதத்திலும் ஆதரவு கிடையாதென்பது ஸ்பஷ்டம். ஆக, த்வைதாத்வைத மதங்களிரண்டிலும் அநேக ச்ருதி வாக்யங்களை அமுக்க்யார்த்தகங்களாகக் கொள்ளுதல் உபேக்ஷித்தல் இத்யாதியான பலீயஸ்ஸான தோஷமுள்ளது. இத்தகைய தோஷம் சிறிதும் தட்டப்பெறாதது நமது மதமென்னுமிடம் அடுத்தபடியாக விவரிக்கப்படுகின்றது. கீழே யெடுத்துக்காட்டிய ச்ருதிவாக்யங்களை ஒரு நிகராக ஆதரிப்பவர்கள் விசிஷ்டாத்வைதிகளேயாவர். ஒரு ச்ருதி வாக்கியத்திலும் அமுக்க்யார்த்த கல்பனை யென்பது கிடையாது. எங்ஙனேயென்னில், கீழே கடைசியாக எடுத்துக் காட்டப்பட்ட "யஸ்யாத்மா சரீரமித்யாதிகளான ச்ருதி வாக்யங்களுக்கு கடக ச்ருதிகளென்று பெயர். பேதத்தையும் அபேதத்தையும் விரோத லேசமுமின்றிக்கே பொருந்தச் செய்யவல்லவை அந்தர்யாமி ப்ராஹ்மணவாக்யங்கள்—என்கிற காரணத்தினால் இவற்றுக்கு கடகச்ருதிகளென்னும் பெயர் மிகப்பொருத்தமானது.

**கண்ணன்—** அந்தப் பொருத்தத்தை இன்னமும் நன்கு நிரூபிக்கவேணும்.

**ராமன்—** 'நேஹ நாநாஸ்தி கிஞ்சந' இத்யாதிகளான அத்வைத (அபேத) ச்ருதிகளிலேற்பட்ட அபேதத்தையும் 'க்ஷரம் ப்ரதாநமம்ருதாக்ஷரம் ஹர: 'இத்யாதிகளான த்வைத (பேத) ச்ருதிகளிலேற்பட்ட பேதத்தையும் பொருந்தவிடும் வழி கேள்; சேதநா சேதந ஈச்வரர்களான மூன்று தத்துவப் பொருள்களின் ஸ்வரூப பேதம் உண்மையாதலால் 'க்ஷரம ப்ரதாநமித்யாதி பேதச்ருதிகள் பேதத்தைச் சொல்லி யிருப்பது பாங்கே ப்ரஹ்மம் சேதநாசேதந விசிஷ்டமாய்க் கொண்டு ஒன்றேயாகிறபடியால் 'ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம' இத்யாதியான அபேத ச்ருதிகளும் பொருந்தக் குறையில்லை. 'யஸ்யாத்மா சரீரமித்யாதி அந்தர்யாமி ப்ராஹ்மண ச்ருதிகளானவை ஸர்வேச்வரனை ஸர்வாந்தர்யாமி யென்று தெரிவிக்கும் முகத்தால் பேதத்தையும் அபேதத்தையும் பொருந்த விடுகின்றன என்பது நம் ஆசாரியர்களின் நிரூபணம்.

**கண்ணன்—** இப்போது நான் தெரிந்து கொண்டதை உபபாதிக்கிறேன். சிதசிதீச்வரர்களாகிற மூன்று தத்துவங்களிலும் தனிப்படக் கண்செலுத்தினால் பேதம் க்ரஹிக்கப்படுகிறது. அசேதநமாகிய சரீரம் வேறு; அதனுள்ளுறையும் சேதநன் வேறு; அவனுக்கும் அந்தர்யாமியான பரமாத்மா வேறு என்று பேதப்ரதிபத்தி சாஸ்த்ர ஸம்மதமேயாகும். பல அவயவங்களின் கூட்டரவான சரீரத்திலே கை, கால், காது, மூக்கு முதலானவற்றைத் தனியே பார்க்குமிடத்து பேத ப்ரதிபத்தியும், 'அவயவஸங்காதம் ஒன்று' என்று பார்க்குமிடத்து அபேத ப்ரதிபத்தியும் பொருந்துகின்றது. தேவதத்தன் ஒருவன், யஜ்ஞதத்தன் ஒருவன் இத்யாதி வ்யவஹாரங்களில் தேவதத்தனுக்கும் யஜ்ஞதத்தனுக்கும் ஒருமை எங்ஙனம்? என்று விமர்சிக்க வேணும். 'தேவதத்த: க்ருச:, யஜ்ஞதத்த: ஸ்தூல:' இத்யாதிவ்யவஹாரங்களில் க்ருசத்வமும் ஸ்தூலத்வமும் சரீர தர்மமாகையாலே தேவதத்த யஜ்ஞதத்த சப்தங்கள் சரீரபரங்களேயென்று அறுதியிடப்படுகிறது. 'தேவதத்தோ மேதாவீ, யஜ்ஞதத்த: ப்ரதிபாவாந்' இத்யாதி வ்யவஹாரங்களில் மேதையும் ப்ரதிபையும் ஆத்ம தர்மமாகையாலே அந்த தேவதத்த யஜ்ஞதத்த சப்தங்களே ஆத்ம பரங்களென்று நிர்ணயிக்கப்படுகிறது. ஆத்மாவும் சரீரமும் ஒன்றல்ல வெவ்வேறுபட்டவை. ஆக அநேக வஸ்துக்களிருக்கச் செய்தேயும் ஏகத்வவ்யவஹாரம் நிகழ்ந்து வருவது 'சரீர விசிஷ்டனை சரீரி ஒருவன்' என்னும் ஸங்கியாலத்தனை யன்றோ. இவ்வண்ணமாகவே 'ப்ரஹ்ம ஏகமேவ' என்ற ச்ருதியும் விசிஷ்டைக்யத்தைச் சொல்லுவதாகக் கொள்ளக் குறையில்லையே. ஏவஞ்ச பேதத்திற்கும், அபேதத்திற்கும் அபாயமொன்றுமில்லை யென்றதாயிற்று. சரீரங்களும் சரீரிகளுமாகிற நாநாவஸ்து ஸத்பாவம் ப்ராமாணிகமாகையாலே அபலபிக்க வொண்ணாதே. இங்ஙனே விசிஷ்டைக்யமும் அநுபவஸித்தமாகையாலே அபலபிக்க வொண்ணாததே. ஆக, உண்மையில் வெவ்வேறுபட்ட வஸ்துக்களுப் சரீர சரீரி பாவநிபந்தநமாகவே ஒன்றாக வழங்கப்படுவதாய் ஸித்திக்கையாலே அப்படிப்பட்ட சரீர சரீரிபாவத்தை யுணர்த்துகின்ற அந்தர்யாமி ப்ராஹ்மணாதி ரூபங்களான ச்ருதி வாக்யங்களுக்கு நமது மதத்தில் மிகுந்த கௌரவமுள்ளது. அத்வைதிகள் பேதச்ருதிகளை அநாதரிப்பது போலவும், த்வைதிகள் அபேத ச்ருதிகளை அநாதரிப்பதுபோலவும் நாம் ஒருவகையான

ச்ருதியிலும் அநாதரம் காட்டுகின்றிலோம். ஆகவே ஸர்வச்ருதி ஸாமரஸ்யம் நமக்கே யொழியப் பிறர்க்கில்லையென்பது கல்வெட்டாகத் தேறி நின்றது என்பதாக நான் க்ரஹித்திருக்கிறேன். இது ஸரி தானே.

**ராமன்—** மிகவும் ஸமஞ்ஜஸமாகவே நீ க்ரஹித்திருக்கிறாய். (தொடரும்)



**— கடிதங்கள் —** (1)

## "ஸ்ரீஸுதர்சன மஹாயஜ்ஞம்" —பெங்களூர்

ஸ்ரீ ஸத்ஸம்ப்ரதாய ப்ரவசநஸபை (73, VI Cross Malleswaram. Bangalore-3)யின் ஆதரவில் பெங்களூர் மல்லேச்வரம் ஸ்ரீ ராம மந்திரத்தில் 20—1—76 முதல் 23—1—77 வரை மூன்று தினங்கள் லோகக்ஷேமார்த்தமாக 'ஸ்ரீ ஸுதர்சன மஹா யஜ்ஞம்' நடைபெறவிருக்கிறது. அவ்வமயம், உபய வேத பாராயணமும், இதிஹாஸ புராணாதி படனங்களும், வித்வான்களின் உபந்யாஸமும் ஸ்ரீஸுதர்சந ஹோம ஜப, தர்ப்பணாதிகளும் நடைபெறவிருக்கின்றன. இதில் ஹிந்துக்கள் யாவரும் நன்கொடையளிப்பதன் மூலம் பங்குகொண்டு தங்கள் இடையூறுகள் நீங்கப்பெறலாம். சுதர்சன யாகத்தில் வைக்கப்பெற்று பூஜிக்கப் பெற்ற ஸ்ரீ ஸுதர்சந யந்திரத்தைப்பெற்றுப் பூஜையில்வைத்து தினம் பூஜிப்பதால் அவரவர்களின் இஷ்டம் பூர்த்தியாகும். ரூ. 250 லிருந்து ரூ 25 வரை நன்கொடையளித்து இதில் பங்கு பெறலாம். ஸுதர்சந யந்திர டாலர்கள் ரூ. 150 லிருந்து ரூ. 10 வரை உள்ளவைகள் கிடைக்கும். விவரம் வேண்டுவோர் மேற்படி ஸ்ரீ ஸத்ஸம்ப்ரதாய ப்ரவசந

ஸபை விலாஸத்திற்கு எழுதித் தகவல் பெறலாம். நன்கொடை அளிப்பவர்கள் கீழ்க் கண்ட விலாஸத்திற்கு அனுப்பலாம்.

Sri S RANGACHARI, Treasurer,
Sri Sat Sampradaya Pravachana Sabha,
No. 1266, Kamala Nehru Extension,
Yeswantapur, Bangalore-560022.
or by Mail Transfer to Account No. 7780, Indian Bank,
Malleswaram Branch, Bangalore-560003.

ஆஸ்திகர்கள் எல்லோரும் இதில் பங்குகொண்டு நல்வாழ்வுபெறப் பிரார்த்திக்கிறோம்.

இங்ஙனம்,
காரியக் கமிட்டி,
ஸ்ரீஸுதர்சன மஹாயஜ்ஞம்.

---

ஸ்ரீ:
பூதத்தாழ்வார் திருவடிகளே சரணம்.
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# அன்பின் ஒளி

(ஸ்ரீமதுபயவே. D. ராமஸ்வாமி ஐயங்கார், அட்வகேட், சென்னை).

இறைவனைக் காணும் இதயத்திருள்கெட, ஞானமென்னும்
நிறைவிளக்கேற்றிய பூதத்திருவடிதாள்கள், நெஞ்சத்து
உறையவைத்தாளும் இராமானுசன் புகழோதும் நல்லோர்
மறையினைக்காத்து, இந்த மண்ணகத்தே மன்னவைப்பவரே.

—இராமானுச நூற்றந்தாதி.

முதலாழ்வார் மூவர். அவர்களுள் அன்பிலே நிலைகொண்டவர் நடுவிலாழ்வாரான பூதத்தாழ்வார். அவர் பாடிய இரண்டாந் திருவந்தாதி அன்பந்தாதி. அன்பிலே தொடங்கி அளவற்ற அன்பிலே முடிகிறது. பொய்கையார் பாடிய அந்தாதி வையத்தந்தாதி. பேயாழ்வார் பாடியது திரு—அந்தாதி. வையம் என்ற சொல்லால் பிரகிருதி தத்வம் பேசப்படுகிறது. அன்பு என்ற சொல்லால் ஜீவ தத்துவம் குறிக்கப்படுகிறது. திரு என்ற சொல்லால் ஈச்வர தத்துவம் பாராட்டப்பெறுகிறது. போக்தா போக்யம் ப்ரேரிதா என்று உபநிடதம் வகுத்துக் கொடுத்த தத்துவத்ரயம் அசேதனம். சேதனன், ஈச்வரன் என்ற மூன்று தத்துவங்களாக வெளிப்படுத்தப்பட்டன. தத்துவத்ரய ஞானம் முமுக்ஷுவுக்கு இன்றியமையாதது என்பதை தேசிகர் பெருமான்

"முத்திக்கருள்சூட மூன்றைத் தெளிமுன்னம்
இத்திக்காலேற்கு மிதம்",

என்ற குறள் வெண்பாவால் காட்டியருளினர். முத்தி—மோக்ஷம், மூன்றைத் தெளிதல்—தத்துவத்ரய ஞானம். இதப்—உபாயம். தத்துவ ஹித புருஷார்த்தங்கள் மூன்றும் ஒரு குறள் வெண்பாவில் அடக்கப்பட்டமை காண்க.

'கவிஞர் போரேறு' என்று போற்றப்படுமவர் பொய்கையார். "பெருந்தமிழன்" என்று தம்மைத் தாமே பாராட்டிக்கொண்டவர் பூதத்தாழ்வார். "தமிழ்த் தலைவன்" என்று அமுசனார் சூட்டிய பிருதம் பெற்றவர் பேயாழ்வார். இம் மூவரையும் சேர்த்து "இன் கவிபாடும் பரமகவிகள்" என்று நம்மாழ்வார் கொண்டாடுகிறார்.



"செந்தமிழ் பாடுவார்" என்பது நாலுகவிப் பெருமாளான திருமங்கையாழ்வார் பாராட்டு.



"ஆதிபக்தர்கள்" என்று வடமொழியிலும், "பாட்டுக்குரிய புழையவர்" என்று தமிழிலும் இவர்களைப் பேசி மகிழ்கிறார் மறைமுடித்தேசிகனார். மூவரும் ஒன்றுசேர்ந்தே ஆலயங்களிலும் பெருமக்கள் பொதுமக்கள் உள்ளங்களிலும் இடம் பெற்றுள்ளனர். மூவர் பெருமையையும் ஒன்றுசேர்த்து முதலாழ்வார்கள் பெருமை என்று அனுபவிப்பது மரபு. பரபக்தி, பரஜ்ஞானம், பரமபக்தி என்று சொல்லப்படும் பக்தி யோகத்தின் முதிர்ந்த தசைகளை மூவரும் தமது பாசுரங்களால் முறையே விளக்கியுள்ளார்கள்.

இருப்பினும் பூதத்தாழ்வார் திருவவதரித்த திருநன்னாளாகிய இன்று ஐப்பசியில் அவிட்டம் (31—10—76) அவரது அருளிச்செயலைச் சற்று ஊன்றி அனுபவிப்போம். 'அன்பிலன்றி ஆழியானை யாவர் காணவல்லரே' என்று திருமழிசைப்பிரான் அறுதியிட்டது பூதத்தாழ்வார் காட்டிய வழியைப் பின்பற்றித்தான். அன்பில் தொடங்கி அன்பில் முடிகிறது என்று மேலே சொன்னோம். இரண்டாம் திருவந்தாதியில் ஆதி, நடு, இறுதி, நெடுகிலும் அன்பே மிகுந்து விளங்குவது காண்கிறோம். அன்பே தகளியா (1) ஆர்வம் செறிந்த மனம் (6) மிக ஆய்ந்த அன்பாக்கி ஏத்தி (24) பைங்கமலம் கையால் அணிந்தேன் உன் சேவடி மேலன்பாய் (65) உன் சேவடி மேலன்பாய் (80) என்றன் அளவன்றால் யானுடைய அன்பு (100) 'ஆவியின் தன்மை அளவல்ல பாரிப்பு" திருவிருத்தம் (67) என்றும் "ஆவியின் பரமல்ல வேட்கை யந்தோ" திருவாய்மொழி (10-3-2) என்றும் பாடிய நம்மாழ்வார் தசையைத்தான் பூதத்தாழ்வார் தசைக்கு ஒப்பிடலாம்.

இவ்வாழ்வார் மங்களாசாஸனம் செய்தருளிய திருப்பதிகள் 13. தாம் திருவவதரித்த ஸ்தலமாகிய மாமல்லையையும் தாம் திருமாலை ஸாக்ஷாத்கரித்த ஸ்தலமாகிய திருக்கோவலூரையும் மறவாமல் பாடியருளியவர். திருவரங்கத்துக்கு ஒவ்வொரு பாசுரம் மட்டும் பாடினார்கள் பொய்கையாரும் பேயாரும். ஆனால் நம் பூதத்தாழ்வார் அரங்கத்துக்கு நான்கு பாசுரங்கள் அமைத்துள்ளார். திருவேங்கடத்துக்கு 9 பாடல்கள். தேவப்பெருமாளுக்கு 3 பாசுரங்கள் (28, 95, 96.) எல்லாவற்றுக்கும் மேல் இம்மூன்று திவ்ய தேசங்களையும் ஒரே பாசுரத்தில் அடக்கிப் பாடிய பெருமை இவ்வாழ்வாருடையதே.

